*Nam nāṭu*

*Malar 4, itaḻ 133*

*November 13, 1956*

Record no. 1131

REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ✶ The Official Organ Of The D.P.F.

## கைதிகள் நூல் நூற்கப் பயிற்றுவிக்கப்படுவராம்!

சென்னை, நவ. 12—

சென்னை மாநில சிறைகளில் உள்ள கைதிகளுக்கு நூல் நூற்கப் பயிற்சியளிக்கப்போகிறதாம், சென்னை சர்க்கார்!

சென்னை, கோவை, சேலம், வேலூர், திருச்சி ஆகிய இடங்களில் உள்ள மத்திய சிறைகளில் இதற்கான திட்டம் முதன்முதலில் சீக்கிரமே அமுல் செய்யப்படுமாம்.

இதற்காக ஒவ்வொரு சிறையிலும் ஒரு பயிற்சியாளர் நியமிக்கப்படுவாராம்.

மலர் 4] சென்னை: ஐப்பசி 28உ செவ்வாய் (13—11—56) ★ ★ வெளியூர்: ஐப்பசி 29உ புதன் (14—11—56) [இதழ் 133

# தமிழ்ச் சங்கம் முழங்க வாரீர்

## பெருமை தரும் வரலாறு உடையோம்; அருமை மிகு மொழியும் உடையோம்

## இலக்கியச் செல்வம் பெற்றேம்; நாகரீகச் செழிப்பும் பெற்றேம்

### இருந்தும் வீழ்ந்தோம்! தாழ்ந்தோம்!

### தமிழகம் எழுச்சியுற—தமிழ் அரியாசனம் ஏற!

ஆற்றல் அறிவுப் படையினரே! கிளர்ந்தெழுவீர்!

### மாணவர்கட்கு நெடுஞ்செழியன் அன்பழைப்பு

சென்னை லயோலா கல்லூரி பெர்ட்ரம் மண்டபத்தில் நமிழவேள் பி டி. இராசன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற சென்னை கல்லூரித் தமிழ் மன்ற இரண்டாவதாண்டுத் துவக்க விழாக்கூட்டத்தில் தி. மு க. பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் ஆற்றின பேருரையின் சுருக்கம் கீழே தரப்படுகிறது :—

"சென்னைக் கல்லூரித் தமிழ் மன்றத்தின் இரண்டாவது ஆண்டுத் துவக்க விழா இத்தனை சீரும் சிறப்புமாக, பொலிவுற விளங்கும் இம்மண்டபத்தில் நடைபெறுவதை காண மகிழ்கிறேன். சென்னையிலுள்ள பல்வேறு கல்லூரி மாணவர்களும் இத்தமிழ் மன்றத்துடன் ஈடுபாடுகொண்டிருப்பதைக் காண மகிழ்கிறேன். மாணவர் தம் ஆற்றல்மிகு செயல்களையெல்லாம் நேரிலேயே கண்டறியும் வாய்ப்பு கிடைத்தமைக்காகத் தமிழ் மன்றத்தவருக்கு என் நன்றியையும் மகிழ்ச்சியையும் வணக்கத்தையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

"இத்தகுத் தமிழ் மன்றங்களை நாடு நகரெங்கும், பட்டிதொட்டிகளிலெல்லாம் இப்போது நாம் காண்கிறோம். அங்கெல்லாம் தமிழ் மன்றங்களை நிறுவ வேண்டுமென்ற ஆர்வத்தையும் ஊக்கத்தையும், மொழி எழுச்சியையும் நாம் கண்டு வருகிறோம். பள்ளிகளிலேயும் கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் தமிழ் மன்றங்கள் நல்ல முறையில் வளரும் காட்சியையும், நாட்டில் இன்று தமிழ் மணம் கமழும் நிலையையும் காண உண்மையிலேயே நாம் பூரிப்படைகிறோம்.

"தமிழர்தம் வீரம், தமிழர்தம் பண்பாடு ஆகியவற்றை மாணவர்கள்தான் முன்வந்து பரப்ப வேண்டும். எதிர்காலத்தில் தமிழ் மொழியை வாழ வைக்க, வளர வைக்க—தமிழரை வாழ வைக்க வளர வைக்க—தமிழ் நாட்டை வாழவைக்க, வளரவைக்க இத்தகுத் தமிழ் மன்றங்கள் நிறுவப்பட வேண்டும். எதிர்காலத் தமிழகத்திற்கு நல்ல பல பணிகளையெல்லாம் ஆற்றல் படையினர்—அறிவுப் படையினராகிய மாணவர்களால்தான் செய்ய முடியும்.

### 'நாட்டை உருவாக்கும் நிலைக்களன்'

"நாட்டை உருவாக்கும் நிலைக்களனாக இருப்பவர்கள் மாணவர்களாகிய உங்களைப் போன்றவர்கள்தான். இந்தச்செல்வத்தினால்தான் நாட்டின் அரசியல், சமுதாயம், வாணிபம் போன்ற பல துறைகளிலும் நல்ல பண்புகள் உருவாக முடியும். இத்தகுப்படை சீருடனும் சிறப்புடனும் வளருமானால் வீழ்ந்து கிடக்கும் நமது நாடு எழுச்சியுற்று நல்ல நாடாக மாறமுடியும். கூட்டங்களில் பேசப்படுவதைக் கேட்பதுடன் மட்டுமல்லாது, கூறப்படும் கருத்துக்களை அலசிப் பார்த்து, அவற்றை நடைமுறைக்குக் கொண்டுவருவதற்கான உள்ள உரமும் உடல் வலிவும் பெற்றிருக்க வேண்டும் மாணவர்கள்.

"நம்முடைய நாட்டின் இறந்த கால வரலாறு நமக்கெல்லாம் எழுச்சியூட்டத் தக்கதாக அமைந்திருக்கிறது. நாட்டுக்கு—நாட்டு மக்களுக்குப் பாடுபட வேண்டும் என்ற எழுச்சியும் பண்பும் வளரவேண்டுமென்றால் நாம் நமது நாட்டின் இறந்த கால வரலாற்றைப் படிக்க வேண்டும்.

"நாம் நமது நாட்டின் இறந்த காலத்தைத் திரும்பிப் பார்க்கும்போது, நாமெல்லாம் பெருமைப்படும் அளவிற்கு நமது இலக்கியம் இருக்கக் காண்கிறோம். நம்முடைய மொழி உலகில் உள்ள தனிப்பட்ட பெருமையுடைய உயர் தனிச் செம்மொழிகளில் ஒன்று என்பதை அறியப் பூரிப்படைகிறோம். நம்மொழியின் சிறப்பைக் கேட்டதும் கூனனும் நிமிர்ந்து விடுவான். அத்தகு உணர்ச்சியூட்டக்கூடியது நமது மொழி.

"உலகில் எத்தனையோ மொழிகள் தோன்றி அழிந்துவிட்டன. லத்தீன், கிரேக்கம், சமஸ்கிருதம் ஆகிய மொழிகளெல்லாம் இன்று வெறும் ஏட்டளவிலேயேதான் இருக்கின்றன. ஆனால் அன்றும் இன்றும் என்றும் தனித்து நிற்கும் சிறந்த மொழி நமது தமிழ்—இயற்கையோடு இயைந்து வளர்ந்த மொழி தமிழ் என்பது நமக்குப் பெருமை தருவதாகும்.

### 'இலக்கியங்களுள் சிறந்தது தொல்காப்பியம்'

"நம்முடைய இலக்கியங்களிலெல்லாம் சிறந்தது தொல்காப்பியம். அந்த நூலாசிரியரின் காலம் ஏறக்குறைய 3,000 ஆண்டுக்கு முற்பட்டதென்று வல்லுநர்கள் கணித்திருக்கிறார்கள். உலகில் வழங்கும் மற்ற மொழிகளில் உள்ள இலக்கியங்களெல்லாம் அந்தந்தமொழிக்கான இலக்கணத்தை மட்டுமே வரையறுத்துக் கூறியிருக்கின்றன ஆனால், 3,000 ஆண்டுகட்குமுன்னர் எழுதப்பட்டதாகக் கூறப்படும் நமது தொல்காப்பியமோ, வெறும் இலக்கண நூலாக மட்டுமல்ல; மக்களின் வாழ்க்கைக்கும் இலக்கணம் வகுத்துக்கூறும் நூலாக அமைந்திருக்கிறது. இன்னின்ன இப்படி இப்படிச் செய்தால் தீமைகள் அகலும்—நன்மைகள் பிறக்கும்—இடுக்கண்கள் அகலும்; அரசன் இப்படி இப்படி இருக்கவேண்டும்; வீரனொருவன் இப்படி இப்படி ஒழுகவேண்டும்; காதல் ஒழுக்கம் இப்படி இப்படி இன்னின்ன இடங்களில் நடைபெறவேண்டும் என்றெல்லாம், மக்களின் வாழ்க்கைக்கு இலக்கணம் வகுத்துத் தந்திருக்கிற ஒரு பெரும் நூல் தொல்காப்பியம்!

"3,000 ஆண்டுகளுக்கு முன்னலேயே வாழ்க்கை இலக்கணத்தை வரையறுத்துக் கூறும் தொல்காப்பியம் எழுதப்பட்டிருந்தால், அதற்குமுன் எத்தனை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னலேயே நமது நாட்டில் நாகரீகம் வளர்ந்திருக்கவேண்டும்! தொல்காப்பியம் எழுதின ஆசிரியருங்கூட, 'நான் இன்னின்னவற்றை ஒப்பிட்டுத்தான் கூறுகிறேன்' என்று தெரிவிக்கிறார். அப்படியானால் அதற்கு முன்னேயே நமது நாட்டில், வாழ்க்கை சொல், எழுத்து ஆகியவற்றுக்கெல்லாம் இலக்கணம் வகுத்த தொல்காப்பியம் எழுதும் அளவிற்கு நாகரீகம் இருந்திருக்க வேண்டும் என்பதுதான் பொருள்.

### 'பெருமை தரும் வரலாறுடையோம்'

"இறந்தகால வரலாறு நமக்குப் பெருமையையே தருகிறது. நாம் இறந்த காலத்தைப் பார்க்கிறோமென்றால் பழமைக்கு நெளிந்து கொடுக்கிறோமென்பதல்ல—பழமைக்குப் பணிந்து கொடுக்கிறோமென்பதல்ல பொருள். பழமையைப் பார்த்து நமக்குத் தேவையானதை எடுத்துக் கொள்வதற்காகத்தான்.

"உலகிற்கு நாகரீகம் பரவினதே கடல் கொண்டதாகக் கூறப்படும் நமது குமரிக் கண்டத்திலிருந்துதான்; இவ்விருந்துதான் அடிப்படைக் கருத்துக்களே பரவியிருக்கின்றன. இந்த நாகரீகம் சிறுகச் சிறுகப் பரவி மொகஞ்சோதாரோ நாகரீகமாகவும், பின்னர் யூப்ரடீஸ், எகிப்துக்கும் பரவி, அங்கிருந்து கிரேக்கத்திற்கும், கிரேக்கத்திலிருந்து இத்தாலிக்கும், இத்தாலியிலிருந்து ஸ்பெயின் போன்ற நாடுகளுக்கும் பரவினதாக வல்லுநர்கள் கூறியிருக்கிறார்கள். மறைந்துபோன ஈராஸ் பாதிரியார் அவர்கள்கூட குமரிக்கண்டத்தின் நாகரீகம் எவ்வாறு பரவினது என்பதைத் தெளிவாகக் கூறியிருக்கிறார்.

"பத்து என்ற ஒரு எண்ணே இங்கிருந்துதான் துவங்கியிருக்கிறது—ஒரு வாரத்திற்கு 7 நாட்கள்—ஒரு மாதத்திற்கு 30 நாட்கள் இப்படிப்பட்ட நிலைகளுக்கான அடிப்படைக் காரணங்களே இங்கிருந்துதான் பரவியிருக்கின்றன. 2,500 ஆண்டுக்கு முன் ரோம் நாகரீகம் வளருமுன்—ரோம் நாகரீகத்திற்கு முன்னர் கிரேக்க நாகரீகமும்,—அதற்கு முன் எகிப்து நாகரீகமும், அதற்கு முன் அரேபிய நாகரீகமும், அதற்கு முன் 4,000 ஆண்டுகட்கு முற்பட்டதாகக் கூறப்படும் சுமேரியா நாகரீகத்திற்கும், அதற்கும் முன் 5,000 ஆண்டுகட்கு முற்பட்டதாகக் கூறப்படும் மொகஞ்சோ தாரோ - ஆரப்பா நாகரீகத்திற்கும், அதற்கும் முன் 7,000 ஆண்டுகட்கு முற்பட்டதாகக் கூறப்படும் தென்னாட்டு நாகரீகத்திற்கும் முன்னதாக, இற்றைக்கும் சுமார் 8,000 ஆண்டுகட்கு முற்பட்டது குமரிக் கண்ட நாகரீகம் என்பதை ஈராஸ் பாதிரியார் அவர்கள் தெரிவித்திருக்கிறார்.

"மூன்று நாட்களாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இது பற்றி அவர் பேசும்போது கடைசியில் 'இவைகளையெல்லாம் பேசுகிற நான், பாதிரியார் ஈராஸ் அல்ல; ஸ்பெயின் நாட்டிலிருந்து வந்த திராவிடன்' என்று குறிப்பிட்டார்.

"தமிழகத்தின் இந்த இறந்தகால வரலாற்றை நாம் நினைக்கும்போதெல்லாம் பூரிப்படைகிறோம் பெருமைப்படுகிறோம். ஆனால் இன்று நாம் நலிந்து கிடக்கிறோம்.

### 'வளம் பலவும் பெற்றத் தமிழ் மொழி!'

"தமிழ் மொழி எல்லா வளமும் பெற்றிருக்கிற மொழி. வேர்ச்சொல் உள்ள மொழி தமிழ்! அது வளரும் விரியும் பண்புகொண்டது; இது நமது தமிழ் இலக்கியங்களைப் பார்த்தால் தெளிவாகத் தெரியும். 2,500 ஆண்டுகட்கு முற்பட்ட தொல்காப்பியம், அதற்குப் பின் வந்த அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம், ஆசாரக்கோவை, சூடாமணி, தேவாரங்கள், திருவாசகங்கள், சீவக சிந்தாமணி, பெரிய புராணம், கம்ப இராமாயணம், கந்தபுராணம், வில்லிபாரதம் பட்டினத்தார்பாடல்கள், தாயுமானர் பாடல்கள், இராமலிங்கர் திருவருட்பா, 20-ம் நூற்றாண்டின் துவக்கத்தில் காணப்படும் பாரதியார் பாடல்கள், இப்போதுள்ள பாரதிதாசன் பாடல்கள் ஆகிய இந்த இலக்கியங்களையெல்லாம் பார்த்தால், தமிழகம் எங்கெங்கு வளர்ந்தது—எங்கெங்கு வீழ்ந்தது—அதற்கான காரணம் என்ன என்பதையெல்லாம் தெரிந்துகொள்ளலாம்.

### 'நாம் யார்க்கும் குடியல்லோம்!'

"நமது பண்டைக்கால மன்னர்கள் பிறருக்கு அடிமைப்பட்டவர்களல்ல; வீரர்கள் பலர் தோன்றினார்கள்; இமயம் வென்றான் சேரன்—விற்கொடியை நாட்டினான்; கரிகால் சோழன் சென்றான்; சோழன் கணவாயை ஏற்படுத்தினான்; இமயத்தை வென்றான் பாண்டியன்—மீன் கொடியை உயர்த்தினான்; மௌரியர் படையெடுத்தனர்—எதிர்த்து விரட்டியடித்தனர் நம் பண்டை அரசர்கள். ஏன்? நமது தமிழகம் வீழ்ந்துபட்ட நிலையிலும் கூட சாளுக்கியர்களும், பல்லவர்களும், கள்ளர், மறவர், பாண்டியர்களும், மற்றும் பல குறுநில மன்னர்களும் மருதுபாண்டியர்களும் ஊமைத்துரையும், கட்டபொம்மனும் இந்த நாட்டை சிறு சிறு துண்டுகளாக ஆண்டாலும் கூட நன்றாகவே ஆண்டதாகத்தான் காணப்படுகிறார்கள். அப்படி முன்னால் நமது நாடு நன்றாக வாழ்ந்ததற்கும், பின்னால் வீழ்ந்ததற்கும் காரணம் என்ன?

"பழங்காலத்தில் எல்லாம் மக்கள் இயற்கையோடியைந்த வாழ்க்கை நடத்தினார்கள். அவர்களெல்லாம், வாயுவாஸ்திரத்தையோ வருணாஸ்திரத்தையோ நம்பிப் போரிட்டதாக எந்த இலக்கியத்திலும் காண முடியாது! அப்படி வாழ்ந்தத் தமிழகம்தான் இன்று வீழ்ந்து கிடக்கிறது. எனவே, வீழ்ந்துபட்ட நமது தமிழகம் மீண்டும் வளர்ச்சி பெற இந்தத் தலைமுறையினராகிய நாம் பாடுபட வேண்டும். இந்தத் தலைமுறைக்குத்தான் நாட்டுப் பொறுப்புகளும் அதிகம். நம்முடைய எதிர்காலக் கனவு நனவாகச் செய்யும் பெரும் பொறுப்பு மாணவர்களாகிய இந்தத் தலைமுறையினரிடம்தான் அதிகம் இருக்கிறது.

"தமிழ் நாட்டுக்குத் தமிழ்நாடு என்று பெயர் வைக்க—தமிழ்மொழி ஆட்சிமொழியாக இந்தத் தலைமுறையைச் சேர்ந்த மாணவர்கள் முயற்சி செய்தால் அடுத்தத் தலைமுறையிலாயினும் நமது கனவுகள் நனவாகும்.

### 'எதிர்காலச் சிற்பிகள் மாணவர்களே!'

"இங்கு கூடியிருக்கின்ற மாணவர்களில்தான் வருங்கால எஞ்சினியர்கள் இருக்

(4-ம் பக்கம் பார்க்க)

## ரூ. 61 கோடி செலவில் சுரங்க இரயில் பாதை

பம்பாயில் அமைக்கப்படும்!

பம்பாய், நவ. 12—

பம்பாய் நகரில் பூமிக்குக்கீழ் இரயில் பாதை அமைக்கும் திட்டம் குறித்து தொடர்ந்து பரிசீலிக்குமாறு 'பெஸ்ட்' கம்பெனியின் நிர்வாகிக்கு பம்பாய் நகரசபை கட்டளையிட்டுள்ளது.

இந்தச் சுரங்க இரயில் பாதை அமைப்பதற்கு ரூ. 61 கோடி செலவாகுமென மதிப்பிட்டுள்ளது.

நம் நாடு
தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 13-11-'56 செவ்வாய்

# 'ஓட்டைக் கப்பல்'!

'ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோயில் ஆண்டி' என்பார்கள். அதுபோல, 'பாரதத்திற்கு இளைத்தவன் தமிழனு?' என்று, டெல்லிப் பெரியவர்களை வானத்திற்கு உயர்த்திப் புகழுகிற—'அகில இந்தியா'வில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்ட தேசிய ஏடுகளேகூட சிற்சில சந்தர்ப்பங்களில் கடிந்து எழுதுகிற அளவுக்குத் தமிழர்களை—தென்னாட்டவரை மட்டமான மனிதர்களாகக் கருதி டெல்லிப் பெரியவர்களும் வடவரும் நடந்துகொள்ளுகிறார்கள்.

வடவரான இந்தோ-ஆரியர்களுக்குத் தென்னவரான திராவிடர்கள் எப்போதும் இல்லாத முறையில் இன்று அடிமைப்பட்டிருக்கிறார்கள் என்பதால், டெல்லிப் பெரியவர்களுக்குக் கிடைத்துள்ள ஏற்றமும், அதனால் அவர்கள் கொண்டுள்ள தலைக்கனமும் கொஞ்சநஞ்சமல்ல!

கிடைத்தற்கரிய 'பெருமை' கிடைத்துவிட்டதால், கொண்டுள்ள கர்வம் தலைக்கேறிய நிலையில் அவர்கள், தங்கள் வசப்பட்டுள்ள திராவிட மக்களை, பொழுதொறும் துன்புறுத்தி இன்புறுவதைத் தொழிலாகக் கொண்டிருக்கிறார்கள். அதன் விளைவுதான், 'அவர்களே நம் தலைவர்கள்' என்று பதிகம் பாடும் பத்திரிகைகள்கூட ஓரிரு நேரங்களில், 'பாரதத்திற்கு இளைத்தவன் தமிழனு?' என்று கேட்பது!

வடநாட்டுப் பெரிய மனிதர்கள், 'தமிழர்கள்—தென்னாட்டவர் தங்களவரல்லர்' என்று கருதுவதைத் தங்களின் ஒவ்வொரு 'அகில இந்திய நடவடிக்கை'யிலும் மெய்ப்பித்து வருகின்றனர்.

தமிழர்கள்—தென்னாட்டவர் பிரச்சினைகள் அவர்களது கவனத்தை ஈர்த்ததே இல்லை. தமிழர்தம் பிரச்சினைகளை அவர்கள், 'தங்களவரில் ஒரு பிரிவினருக்குத் தோன்றியுள்ள பிரச்சினை' என்று கருதியதே இல்லை. வேறு எவருக்கோ—தங்களின் அடிமைகளுக்கு நேர்ந்துவிட்டவை என்றே கருதி வந்திருக்கின்றனர்; இன்னும் கருதி வருகின்றனர். எதிர்காலத்திலும் அவர்கள் அப்படியேதான் நடந்துகொள்வர் என்பதைப் புத்திசாலிகளால் தெளிவாக உணர முடியும்.

பர்மாவில் குடியேறியுள்ள 'இந்தியர்'களில் மிகப் பெரும்பாலானோர் தமிழர்கள்; இவர்களில் நூற்றுக்குத் தொண்ணூறுபேர்வரை தொழிலாளர்கள்; இவர்கள் தங்கள் தாயகத்தில் வாழ வழியின்றி, பர்மாக் காடுகளில் ரப்பர் பால் வடிக்கச் சென்றவர்கள்; தகரம் தோண்டப் புறப்பட்டவர்கள்; அங்கிருந்துகொண்டு தாயகத்தில் வாழும் பெற்றோரையும் சுற்றத்தையும் நடைபிணங்களாகவேனும் உலவ உதவிக்கொண்டிருப்பவர்கள்.

இவர்கள் தாயகத்திற்கு வந்து போக இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை முயற்சிப்பர். அப்படி அவர்கள் வந்து போக சென்னைக்கும் இரங்கூனுக்கும் இடையில் உள்ள கப்பல் போக்குவரத்துதான் மலிவான வசதியாகும்.

இந்த வசதி சென்ற ஆண்டில் துண்டிக்கப்பட்டதும் அதைத் தொடர்ந்து தமிழகத்தில் பெரும் கூக்குரல் எழும்பியதும், பின்னர் 'மீண்டும் கப்பல் போக்குவரத்து ஆரம்பமாகிறது' என்ற செய்தி வந்ததும் நினைவிருக்கலாம்.

'சென்னைக்கும் இரங்கூனுக்கும்இடையில் கப்பல் போக்குவரத்து நின்றுவிட்டது; அதனால் எண்ணற்றற் தமிழர்கள் அவதிப்படுகிறார்கள்' என்ற செய்தி, டெல்லிப் பெரியவர்களுக்குக் கலக்கத்தைத் தரவில்லை; உடன் கவனிக்க வேண்டும் என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கவில்லை. வழக்கம்போலவே 'பாதிக்கப்படுவோர் தமிழர்தானே' என்று கவலையற்றிருந்தனர்.

அவர்களைக் கூறுவானேன்? இங்கே தமிழர்களுக்காகஉள்ள ஒன்று என்று கூறிடுகிறார்களே, மாநில சர்க்கார், அவர்கள்தான் செய்தது என்ன?

'பச்சைத் தமிழர்கள்' என்ற பட்டப்பெயரோடு பவனிவரும் காமராசர்கள் என்ன செய்தனர்? வடவருக்கு, தமிழகத்தில் எங்களைவிடப் பரமதாசர்கள் கிடைக்க முடியுமா என்று கேட்டுவிட்டு மந்திரி சபையில் கொலு வீற்றிருந்தனர்.

நாமும், தமிழர்தம் நலனில் அக்கறை கொண்ட சிலரும் சேர்ந்து கூக்குரலிட்டோம்.

டில்லியிடம், இரண்டொரு தமிழ் உணர்வு கொண்ட மக்கள் சபை உறுப்பினர்கள் முறையிட்டனர்; ஏதோ 'கருணை' காட்டினர் அந்தப் பெரியவர்கள் என்றெண்ணும் வகையில், 'போக்குவரத்து மீண்டும் தொடங்கும்' என்று செய்தி வந்தது.

போக்குவரத்தும் தொடங்கிற்று; ஆனால், நிலை என்ன? கிடைத்த கப்பல், 'உபயோகமில்லை' என்று ஒதுக்கித் தள்ளப்பட்ட 'ஓட்டைக் கப்பல்' 'எஸ். எஸ். சோனுவதி'!

திரும்பவும் விடப்பட்ட அந்த 'ஓட்டைக் கப்பல்' மூலம் பிரயாணம் செய்தவர்கள், பெரும் இன்னல்களுக்கு ஆளாக நேர்ந்தனர் என்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

'இரங்கூனுக்கும் கல்கத்தாவிற்குமிடையில் ஓடும் கப்பல் இதுபோன்றதானால், இதற்குள் கல்கத்தாவில் கண்டன முழக்கம் எழும்பியிருக்குமே'' என்று கேட்டிருக்கிறது பர்மா தமிழ் இதழ் ஒன்று.

பிரயாணம் செய்வோர் தமிழர்கள் என்பதால்தானே, ஓட்டைக் கப்பல்களை ஓடவிடுகிறது டெல்லி? அந்த ஓட்டைக் கப்பலில் பிரயாணம் செய்து தீர வேண்டியுள்ள தமிழர்கள் படும அவதி, டெல்லிக்குக் கவலை தருவதல்லவே! மாருக, மகிழ்ச்சி தரக்கூடியதுதானே!

பர்மா தமிழர் மட்டுமின்றி, தாயகத்தோரும் 'டெல்லி'க்கும் தமிழகத்திற்கும் உள்ள உறவினைப் புரிந்துகொண்டாலன்றி, தமிழர் இதுபோன்று எல்லாத் துறையிலும் படும் அவதிகளுக்கு விமோசனமே இருக்க முடியாது.

'ஓட்டைக் கப்பல்' நீண்ட நாளைக்கு ஓட முடியாது—ஓடக்கூடாது என்பதை டெல்லி உணர வேண்டும்!

## 'தகுதியுள்ள தமிழர்கள் நிரம்ப உண்டு'

'அவர்களுக்கு முதலிடம் தர டில்லி மறந்ததேன்?'

'தின மலர்' இதழ் தரும் சாட்டை

"இந்தியப் புதிய இராஜ்யங்களின் கவர்னர் நியமனம் அநேகமாகப் பூர்த்தியாகி விட்டது; சென்னைக்கு யார் வருகிறார் என்பது ஒன்றுதான் பாக்கியுள்ளது.

"இந்தக் கவர்னர் நியமனங்களில் தமிழர் எவரும் அகப்படாததில் தமிழர்கள் சிறிது மனத்தாங்கல் கொண்டிருக்கின்றனர் என்பதை மத்திய பீடம் அறிந்ததோ என்பது தெரியவில்லை.

"சுதந்திர காலத்தின் ஆரம்பக் கட்டத்தில், தமிழர்களுக்கே முதலிடம் கொடுக்கவேண்டும் என்று தோன்றிய மத்திய ஆட்சியினர், இப்போது ஏன் தமிழர்களை மறக்க ஆரம்பித்தார்கள் என்பது தெரியவில்லை.

"தகுதியுள்ள தமிழர்கள் நிரம்பப் பேர் இருந்தும் மத்திய சர்க்கார் கவனிக்காமற்போனது வருத்தம் தரும் செயலாகும்.

"கட்டங்கள் இனியும் கையை விட்டுப் போனதாகத் தெரியவில்லை. மனக்கனிந்தால் அதற்கான வழி தானே பிறக்கும் என்பது உறுதி."

—'தினமலர்': 8-11-56

## ஏழைகளுக்கு இலவச சட்ட உதவி

எல்லா மாநிலங்களிலும் ஏற்படுத்தப்படுமா?

பம்பாய், நவ. 10—

இந்திய சமூகக் குழுவின் உபகமிட்டி கூடி, உடனடியாக ஒரு மத்தியக் குழு அமைக்க முடிவு செய்துள்ளது.

இந்த மத்தியக் குழு, சட்ட உதவி நிதியின் மூலம் ஏழைகளுக்கு இலவசமாக உதவியளிக்கும்.

இந்த உதவி பெற விரும்புவோரின் தகுதியையும், வருமானத்தையும் கண்டறிந்து, முழு உதவியோ அல்லது கால் பங்கு உதவியோ அளிக்கப்படுமாம்.

இந்த சலுகை சிவில் சம்பந்தமான வழக்குகளுக்கு மட்டுமல்லாது கிரிமினல் வழக்கில் ஈடுபட்டவர்களுக்கும் அளிக்கப்படும்.

இம்மாதிரி சட்ட உதவியளிக்கவும், உதவியளிக்கவும் மற்ற மாநிலங்களிலும் அட்வகேட்—ஜெனரல் தலைமையில், ஒவ்வொரு மாவட்டத்திலும் ஏற்படுத்தப்பட வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளப்பட்டுள்ளது.

பம்பாய் மாநிலத்தின் நிதி அமைச்சர் மேதா தலைமையில் இந்தக் கூட்டம் நடைபெற்றது.

## நில நடுக்கத்தால் பாதிக்கப்பட்டோர்

குடியிருப்புக்கு வசதி செய்து தர அரசாங்கம் முனைகிறது

கட்ச்-மன்ட்வி, நவ. 10—

இரண்டு மாடிகள் கொண்ட 400 வீடுகள் கட்டித் தருவதற்கு 410 ஏக்கர் நிலத்தை அரசாங்கம் வசப்படுத்தியுள்ளது.

இந்த வீடுகள், சமீபத்தில் அஞ்சார் நில நடுக்கத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவியளிக்க வேண்டும் என்ற தூய நோக்கத்தோடு இது மேற்கொள்ளப்படுகிறது.

## சென்னையில் பூதக் கண்ணுடித் தொழிற்சாலை அமையும்?

### ஜெர்மன் நிறுவனத்துடன் தமிழ் நாட்டுத் தொழிலதிபர் கூட்டு முயற்சி

சென்னை, நவ. 11—

மூக்குக் கண்ணுடிகள், பூதக் கண்ணுடிகள், தூரதரிசினிகள், சினிமாவுக்கான பூதக்கண்ணுடிகள் மற்றும் பல விஞ்ஞானக் கருவிகள் எல்லாம் உற்பத்தி செய்யக்கூடிய தொழிற்சாலை ஒன்று சீக்கிரமே தென்னாட்டில் அமையக்கூடும் என்று தெரியவருகிறது.

சென்னையைச் சேர்ந்த தனிப்பட்ட தொழிலதிபர் ஒருவர் அண்மையில் ஐரோப்பா சென்றிருந்தபோது, ஜெர்மன் கம்பெனி ஒன்றுடன் இத்தகு தொழிற்சாலை துவக்குவது பற்றிப் பேசி வந்திருப்பதாயும், ஜெர்மன் நிறுவனத்தார் சீக்கிரமே டில்லி வந்து, டில்லி சர்க்காருடன் பேச்சுவார்த்தை நடத்துவர் என்றும் தெரியவருகிறது.

### செயற்கைக் கற்கள்

செயற்கை (வைர)க் கற்கள் தயாரிப்பதற்காக, ஸ்விஸ் கம்பெனி ஒன்றுடன், இதே எம். வி. சர்மா என்ற தொழிலதிபர் கூட்டுமுயற்சியில் ஈடுபட்டு, மேட்டுப்பாளையத்தில் தொழிற்சாலை ஒன்றினைத் துவக்கியிருப்பதாகவும் தெரியவருகிறது.

இத்தொழிற்சாலை நிர்மாணத்திற்காக, ஸ்விஸ் நிறுவனத்தவரும் வந்துவிட்டனர் என்றும் தெரியவருகிறது.

## மாதவரம் பால் காலனி

நடைமுறை பற்றித் தகவல்

சென்னை, நவ. 10—

மாதவரம் பால் காலனித் திட்டம் இன்னும் இரு ஆண்டுகளில் பூர்த்தியாகுமென்று தெரிகிறது.

சுமார் 4,000 கால்நடைகள் மாதவரம் காலனிக்கு அகற்றப்படும். பாலை, புட்டிகளில் அடைக்கும் நிலையம் ஒன்றும் அமைக்கப்படுமாம்.

தற்போது இந்த காலனிக்கான நிலத்தை வசப்படுத்தும் வேலை நடந்துவருகிறதாம்.

மாவட்ட கலெக்டர் அந்தஸ்தில் ஒரு கமிஷனர் நியமிக்கப்படலாம் என்றும் தெரிகிறது.

## சிறிய கைத்தொழில்களுக்கு ஊக்கம் அளிக்கப்படுகிறது?

புதுடில்லி, நவ 9—

தங்களுடைய தேவைகளுக்கு வேண்டிய சிறு பொருள்களை சிறிய கைத்தொழில் உற்பத்தியிலிருந்தே வாங்குவதென்ற முடிவுக்கு இந்திய அரசாங்கம் வந்திருக்கிறதாம்! சிறிய கைத்தொழில்களுக்கு உதவி செய்யவே இந்த நடவடிக்கையாம்!

கடந்த ஆண்டில் டில்லி சர்க்கார் இந்தியக் கம்பெனிகளிடமிருந்து ரூ. 6,20,00,000-த்திற்கு சாமான்களை வாங்கினார்களாம்.

சிறு தொழில்களிடமிருந்து ரூ. 2,72,00,000-த்திற்கு சாமான்கள் வாங்கப்பட்டதாம்.

## வடநாட்டில் எண்ணெய் ஊற்றுகள் கண்டுபிடிக்க!

ரேடியோ சாதனங்கள் வாங்க ரஷ்யாவுடன் ஒப்பந்தம்

புதுடில்லி, நவ. 9—

ரஷ்யாவிலிருந்து சுமார் ரூ. 3,50,000 செலவில் எண்ணெய் ஊற்றுக்கள் கண்டுபிடிப்புக்காகப் பயன்படும் ஆறு ரேடியோ செய்திப் போக்குவரத்து செட்டுகளும், மூன்று டீசல் எஞ்சின் டிரக்குகளும், இதர சாதனங்கள் சிலவற்றையும் வாங்குவதற்கான ஒப்பந்தம் ஒன்றில் இந்திய சர்க்கார் கையெழுத்திட்டுள்ளதாம்.

இராஜஸ்தான், இமயமலையின் அடிவாரப் பிரதேசம் ஆகிய பகுதிகளில் ஆராய்ச்சி வேலைகளில் ஈடுபடும் குழுவினருக்கு இச்சாதனங்கள் பயன்படும்.

## இந்தியா-இலங்கை உறவு

திருப்திகரமாக இல்லையாம்!

பம்பாய், நவ. 11—

'இந்தியா—இலங்கை உறவில் இப்போதிருக்கும் நிலைமை திருப்திகரமாக இல்லை,'' என்று இலங்கைப் பிரதமர் பண்டாரநாயகா கூறியுள்ளார்.

'பண்டித நேருவுடன் அது பற்றி விவாதம் நடத்துவாரா?' என்று கேட்டபோது, 'இரு தினங்கள் மட்டுமே டில்லியில் இருக்கப்போகிறேன்; எனவே, இப்பிரச்சினை பற்றிப் பேசுவதற்கு அவகாசம் இல்லை,'' என்று அவர் கூறியுள்ளார்.

## சாதியைக் குறிக்கும் நடவடிக்கைகள்

தவிர்க்க நடவடிக்கை?

ஐதராபாத், நவ. 10—

அரசாங்கம், நீதிமன்றம் ஆகியவற்றின் நடவடிக்கைகளில் எவ்வளவு தூரம் சாதியைக் குறிப்பதைத் தவிர்க்கலாம் என்பதுபற்றித் தங்கள் கருத்துக்களைத் தெரிவிக்குமாறு மாநில அரசுகளை மத்திய அரசாங்கம் கேட்டுள்ளதாம்.

## தானே இயங்கும் டிக்கெட் இயந்திரம்!

தாம்பரம் இரயில்வே நிலையத்தில் நிறுவப்படுமாம்

தாம்பரம் இரயில்வே நிலையத்தில் தானே இயங்கும் டிக்கெட் இயந்திரமொன்று நிறுவப்படுமாம்.

சென்னையின் சுற்றுப்புற இரயில்வே நிலையங்களில் மின்சார ஒளிவசதி செய்து தருவதற்கும் ஏற்பாடுகள் செய்யப்படுமாம்.

## 1857-ம் ஆண்டு போராட்டம்

நூற்றுண்டு விழா கொண்டாட ஏற்பாடுகள்

புதுடில்லி, நவ. 9—

1857-ம் ஆண்டு நடைபெற்ற 'சிப்பாய்க் கலகம்' என்று அழைக்கப்படும் போராட்டத்தை முதல் சுதந்திரப் போராட்டமாகக் கருதி, அதன் நூற்றுண்டு விழாவைக் கொண்டாடுவதற்காகக் குடியரசுத் துணைத் தலைவர் டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் தலைமையில் ஒரு குழு நியமிக்கப்பட்டிருக்கிறதாம்.

இந்தக் குழுவில் பண்டித நேரு உள்ளிட்ட பலரும், எதிர்க்கட்சியைச் சேர்ந்த 4 மக்கள் சபை உறுப்பினர்களும் இடம் பெறுகின்றனராம்

தனித் தபால் தலைகள், தனிச் சினிமாப் படம் தயாரித்து வெளியிடுவதுடன் அலகாபாத், லக்னோ, ஜான்சி, டில்லி ஆகிய இடங்களில் தகுந்த நினைவுச் சின்னங்கள் எழுப்பவும் பல மாநிலங்களிலும் பரவலாக நினைவுப் பூங்காக்கள் எழுப்பவும் குழு முயற்சிக்குமாம்.

## பலூன் மூலம் 76,000 அடி உயரம் பறந்தனர்

புதிய 'ரிக்கார்டு' ஏற்படுத்தினர்

ராபிட்சிடி, நவ. 9—

1935-ல், 72,000 அடி உயரம் பலூனில் பறந்துள்ளதுதான் உலகத்தின் 'ரிக்கார்டு' ஆகும்; ஆனால், நேற்று இரண்டு அமெரிக்கர்கள் 'பலூன்' மூலம் 76,000 அடி உயரம் பறந்தது புதிய 'ரிக்கார்டு' ஒன்றை ஏற்படுத்திவிட்டனர்!



# எல்லோருக்கும் வேலை தந்தனரா?

## கல்வி புகட்டினரா? வாழ்வு அளித்தனரா?

### காங்கிரசார் சாதித்தது என்ன?

*சென்னையில் ஆசைத்தம்பி முழக்கம்*

"இவர்களால் 2000 கோடி ரூபாய்க்குத் திட்டம் தீட்டித்தர முடியுமா?—என்று நம்மைப் பார்த்துக் கேட்கிறார்கள் நமது அமைச்சர்கள்! நம்மிடம் திட்டமா இல்லை? நம்மிடம் இருப்பது பணப் பஞ்சம்தானே? எப்படி எப்படிச் செலவு செய்து இந்த நாட்டை நல்லதொரு நாடாகச் செய்யலாம் என்பதற்கு நம்மிடம் திட்டங்கள் எதுவும் கிடையாதாம்! 'திட்டம் இருக்கிறதா அண்ணுதுரையிடம்?' என்று கேட்கிறாரே அமைச்சர் சுப்பிரமணியம்—அண்ணுவிடம் கேட்டுத்தானு திட்டம் தெரிந்துகொள்ள வேண்டும்?

"நாட்டில் பிச்சைக்காரர்கள் மலிந்துகிடக்கிறார்களே—இந்த 2,000 கோடி ரூபாயையும் வைத்துக்கொண்டு பிச்சைக்காரர் ஒழிப்புத் திட்டம் தீட்டலாமே—அது ஒரு நல்ல திட்டம்தான்; கோடிக்கணக்கில் மாவட்டந்தோறும் தொழிற்சாலைகளை ஏற்படுத்தி மக்களுக்கு வேலை வாய்ப்பளிக்க ஒரு திட்டம் தீட்டட்டும்; தொழிலாளிகளுக்கு அதிகச் சம்பளம் கொடுக்க ஒரு திட்டம் தீட்டட்டும்; நல்ல பல பாதைகளை ஏற்படுத்தலாமே? அதன்மூலம் பலரை வேலையிலீடுபடுத்தட்டுமே? இந்தியா சுதந்திரம் பெற்று 8, 9 ஆண்டுகள் ஆகின்றன; இன்னும் நாட்டு மக்களில் 100-க்கு 80 பேர் கல்வியறிவு இல்லாதவர்களாக இருக்கிறார்களே; அவர்களை எல்லாம் படிக்க வைக்கத் திட்டம் தீட்டலாமே? நாம் ஆஸ்பத்திரிகள் அதிகமாக்கப்பட வேண்டுமென்று சொல்லும்போது 'டாக்டர்கள்' எங்கே என்று காமராசர் கேட்கிறாரே—இந்தப் பணத்தை வைத்துக்கொண்டு டாக்டர்களை உற்பத்தி செய்யத் திட்டம் தீட்டட்டுமே? தொழிலாளர் குடும்பங்களைச் சேர்ந்த பிள்ளைகள் 10-வது வகுப்பு வரை இலவசமாகப் படிக்கத் திட்டம் தீட்டட்டும்; சாப்பாட்டுக்கு வழியில்லாமல் திண்டாடும் தொழிலாளர் குழந்தைகளுக்குப் பள்ளிகளில் மத்தியானச் சாப்பாடு கொடுக்கலாமே;

"நாதியற்றுப்போய் எத்தனையோ பேர் வீதிகளிலே நிற்கிறார்கள்; பிச்சையெடுக்கிறார்கள்; இரயில்வே ஸ்டேஷன்களில் கையேந்திப் பிச்சையெடுக்கிறார்கள்—இதற்குக் காரணம் என்ன? ஒரு குழந்தையைப் பிச்சையெடுக்க அனுப்பினுல் ஒரு குடும்பத்திற்கு எப்படியாவது அவன்மூலம் 4 அணு வருமானம் தினமும் கிடைக்கிறது. ஆனுல், அந்தக் குழந்தையைப் பள்ளியில் சேர்ப்பதானுல் அவனுக்குப் புத்தகம், ஆடை, மூன்று வேளைக்கும் சாப்பாடு இவையெல்லாம் தேட வேண்டியிருக்கிறது. தொழிலாளிக்கு இதனுல் வறுமையும் கஷ்டமும் ஏற்படுகிறது. அதே நேரத்தில் அக்குழந்தையைப் பிச்சையெடுக்க அனுப்பினுல் அக்குடும்பத்திற்கு மாதம் ரூ. 7½ வருமானம் கிடைக்கிறது. இந்த இக்கட்டான நிலையில் இருக்கின்ற குடும்பத்தைச் சேர்ந்த குழந்தைகளுக்கான முழுச் செலவையும் சர்க்கார் ஏற்றுக்கொண்டு அவர்களைப் படிக்கவைக்கத் திட்டம் தீட்டலாமே? இப்படிப்பட்ட நிலைமைகள் எல்லாம் இருக்கும்போது, 2,000 கோடி ரூபாய்க்குத் திட்டம் தீட்டித்தர முடியுமா என்று நம்மைப் பார்த்துக் கேட்பதைவிட வேறு வேடிக்கை என்ன இருக்கிறது?''

—இவ்வாறு, தோழர் ஏ. வி. பி. ஆசைத்தம்பி அவர்கள், 10-11-56ல், சென்னை—பெத்துநாய்க்கன்பேட்டையில் நடைபெற்ற தி. மு. கழகப் பொதுக்கூட்டத்தில் பேசும்போது குறிப்பிட்டார்.

மேலும் தோழர் ஆசைத்தம்பி தொடர்ந்து பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"'நம்முடைய வருமானம் சுமார் 60 கோடி ரூபாய்தானே—இதை வைத்துக்கொண்டு என்ன செய்வது?' என்று அமைச்சர் கேட்டால் அவரது கேள்வி புத்திசாலித்தனமானது என்று நாமும் ஒத்துக்கொள்ளலாம்; ஒருவேளை இவருக்குத் திட்டம் தீட்டத் தெரியாத காரணத்தால், 2000 கோடி ரூபாய் கிடைத்தால்கூட வேண்டாம் என்று சொல்லி விடுவார்போலிருக்கிறது.

"கடந்த 8, 9 ஆண்டுக் காலமாக காங்கிரஸ் சர்க்கார் நாட்டு மக்களுக்குச் செய்த நன்மை என்ன? காங்கிரஸ்காரர்கள் மக்களிடம் 'ஓட்' வாங்கினதெப்படி? வெள்ளையரைக் காட்டியும், கம்யூனிஸ்டுகளைக் காட்டியும் மக்களிடம் ஓட் கேட்டார்கள்—மக்களும் போட்டார்கள்; அதன் விளைவு—நாடு எங்கும் காங்கிரஸ் மந்திரி சபை அமைந்தது; அதன் பிறகு வெள்ளையனை விரட்டவேண்டும் என்பதற்காக மக்களிடம் சொன்ன காரணங்களில் ஏதாவது ஒன்றை இந்தக் காங்கிரஸ்காரர்கள் செய்து காட்டினதுண்டா? நமக்கு சிறிது காலத்துக்குப் பின் சுதந்திரம் பெற்ற நாடு செஞ்சினு—நம்மோடு சேர்ந்து சுதந்திரம் பெற்ற நாடுதான் பர்மா—அங்கெல்லாம் இன்று காணப்படுகிற மாறுதல்களில் ஒன்றுகூட இங்கு காணவில்லையே? வெள்ளையனை விரட்டுவதற்காகக் காங்கிரசார் வர்ணித்தத் துன்பம், தொல்லை இப்போது நீங்கிவிட்டதா? வெள்ளையன் காலத்திற்கும் இன்றையக் காங்கிரசார் காலத்திற்கும் இடையே என்ன மாறுதல் ஏற்பட்டுவிட்டது? நாட்டிலே வரித் தொல்லையில்லையா? விலைவாசிகளெல்லாம் முன்பிருந்ததைவிட இப்போது அதிகமாக இருக்கின்றனவே? நம்மவர் ஆட்சி ஏற்பட்டும்கூட இன்னும் எந்தவித மாறுதலும் இல்லையே?

"இப்படி எந்தவித முன்னேற்றமும் மாறுதலும் அடைந்திராத ஒரு ஆட்சி இன்னும் நீடித்துக் கொண்டிருக்கலாமா?

"காங்கிரஸ் இயக்கம் மேலும் மேலும் வளரவேண்டுமென்று அவர்கள் கூறுகிறார்கள்; அந்தக் கட்சி மேலும் வளருவதால் பொது மக்களுக்கு ஏதாவது நன்மை ஏற்படுமா—தங்கள் கஷ்டம் தீருமா என்பதைப் பொதுமக்கள் நன்ருகச் சிந்தித்து உணரவேண்டுமென்று திராவிட முன்னேற்றக் கழகம் கேட்டுக்கொள்கிறது.

"தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில், இங்கு காங்கிரசல்ல—கம்யூனிஸ்டுக் கட்சி, மற்றெந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும், மக்களுக்கு எந்தவிதமான நன்மையையும் நிச்சயமாகச் செய்யமுடியாது. ஏனென்றால் இந்த நாட்டின் செல்வம், வருமானம் இங்கு தங்குவதில்லை என்பதுதான். இந்த நாட்டில் கிடைக்கும் வருமானம் எல்லாம் வடநாட்டிற்குப் போய்விடுகிறது. இங்கிருந்து வடநாட்டுக்குப் பண ஆறு பாய்ந்தோடுகிறது. வடநாட்டுக்குப் பாய்கின்ற அந்தப் பண ஆறு இங்கேயே தடுத்து நிறுத்தப்பட வேண்டும்.

### நாம் தரும் வரிகள் நமக்குப் பயன்படுகிறதா?

"'நாட்டில் வருமானம் குறைவாக இருக்கிறது; மேலும் வருமானத்திற்காக வரி போட்டால் மக்கள் கஷ்டப்படுகிறார்கள்' என்று அமைச்சர்கள் கூறுகிறார்கள். அப்படியானுல், இங்கே வருகின்ற வருமானத்தை வைத்து என்ன தான் செய்யப்படுகிறது? அந்தப் பணம் எல்லாம் எங்கே? சுப்பிரமணியத்திற்கு அது தெரியும். ஆனுல் மற்றவர்களைப் பார்த்துக் கோழைகள் என்று சொல்கிற அவர், தானே கோழையாக இருப்பதால்தான் அதைச் சொல்ல மறுக்கிறார்.

"நம்முடைய வரியெல்லாம் டில்லிக்குச் செல்கிறது; நல்ல வருமானம் தரக்கூடிய வரி வழிகளெல்லாம் வடநாட்டின் பிடியில் இருக்கின்றன. நாம் ஏன் அந்தப் பணத்தை வடநாட்டுக்குக்கொடுக்க வேண்டும்? அதை எல்லாம் தடுத்து நிறுத்தினுல் நமக்கு வருடம் 200 - கோடி ரூபாய் வருமானம் கிடைக்குமே!

"ஆலைகளில் அதிகமான அளவில் துணி செய்து இங்கு வந்து விற்கிறான் பம்பாய்க்காரன்; இங்கு கையால் குறைந்த அளவு கைத்தறித் துணி செய்து அதிக விலையில் விற்கிறார்கள் இங்குள்ளவர்கள். நல்ல ரகத்தைச் சேர்ந்த—விலை மதிப்புக் குறைவான அவனது துணியும், ரகத்தில் குறைந்தும் விலை அதிகமானதுமான துணிகளையும் சேர்த்து வியாபாரம் செய்தால் நம் நாட்டுத் துணிக்கு மதிப்பு இருக்குமா? நல்ல ரகத் துணியை தேவையான அளவுக்குமேல் உற்பத்தி செய்யப் பம்பாய்க்காரனுக்கு வாய்ப்பும், வசதியும் இருக்கிறது—இங்குள்ளவர்களுக்கு அந்த வசதி இல்லையே! அவற்றை வாங்கவேண்டிய கட்டாயமான நிலை இருக்கிறது.

"காங்கிரஸ்காரர்கள் வெள்ளைக்காரன் துணியைப் பகிஷ்கரித்து கதர் கட்டிக்கொள்ள ஆரம்பித்தார்களே—ஏன்? அதே தத்துவத்தில் தான் தமிழ் நாட்டுத் துணிக்குப் போட்டியாக வடநாட்டு ஆலைத் துணிகள் இருக்கக்கூடாது என்கிறோம் நாம்.

"இந்த நாட்டுத் துணியையும் வடநாட்டுத் துணியையும் சேர்த்து விற்பனை செய்தால் மக்கள் எதை வாங்குவார்கள்? தங்களுக்கு மலிவாகக் கிடைக்கக்கூடிய வடநாட்டு ஆலைத் துணிகளைத்தான். அதே நேரத்தில் அதன் விளைவு என்ன? நமது நாட்டுத் துணி உற்பத்தி குறைகிறது—வடநாட்டுத் துணியின் உற்பத்தி அதிகரிக்கிறது. நாம் 100 வேட்டிகள் செய்யும்போது வடநாட்டான் 1,000 வேட்டிகள் செய்துவிடுகிறான். அங்கே அவனுக்கு இலாபம். இங்கு ஏதாவது ஒரு தொழிற்சாலையில், அத்தொழிற்சாலை உற்பத்தி செய்த துணிகள் விலையாகாமல் தேங்கிவிட்டால், அத்தொழிற்சாலை முதலாளிகள், அங்கு வேலை செய்யும் 5,000 தொழிலாளர்களில் 1,000 பேரை வேலையிலிருந்து நீக்குகிறான்; வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படுகிறது. இதற்கெல்லாம் உள்ள அடிப்படைக் காரணம் என்ன? அந்த அடிப்படைக் காரணத்தில் திராவிட நாட்டுப் பிரச்சினையை நாம் காண்கிறோம். இந்த நாடு ஒரு தனிநாடு என்ற முறையில் ஆனுல் அங்கு அடுத்த நாட்டுக்காரனின் முதலீடு இருக்க முடியாது. இப்போதிருக்கிற நிலையில் பலமுள்ளவன் இங்கு வந்து முதலீடு போட்டுத் தொழில் நடத்துகிறான்—இலாபம் பெறுகிறான். தமிழன் வெளியே செல்ல வேண்டிய நிலை இருக்கிறது."

## தேர்தல் நிதி தாரீர்!

| வரவு: | ரூ. அணா பை |
| --- | --- |
| 9-11-56 இதழ்ப்படி | 1884-14-8 |
| சென்னை-இராயபுரம் சிங்காரவேலர் பகுத்தறிவு மன்றம் | 101-0-0 |
| விளாப்பாக்கம் (வ. ஆ) தி. மு. க.—30-10-56 நிமிரி பொதுக்கூட்டத்தில் அண்ணு அவர்கள் வசம் | 88-5-9 |
| சிங்கப்பூர் கே. கோதண்டராமன் | 65-0-0 |
| விரிஞ்சிபுரம் தி. மு. க பொதுக்கூட்ட வசூல் உள்பட | 60-12-9 |
| வேலூர்—வேலப்பாடி தி. மு. க பொதுக்கூட்டத்தில் உண்டியல் வசூல் | 25-11-0 |
| சென்னை—திருவல்லிக்கேணி முஸ்லிம் முன்னேற்ற வாலிபர் சங்கம் | 25-0-0 |
| சென்னை ஓட்டல் தொழிலாளர் தோழர்கள்—14-10-56 கோகலே மண்டபச் சிறப்புக் கூட்டத்தில் பொதுச்செயலாளர் வசம் | 15-0-0 |
| தூத்துக்குடி தோழர் துரைபாண்டியன் மூலம் | 11-0-0 |
| தேவகோட்டை தி. மு. க.—12-8-56 பொதுக்கூட்டத்தில் | 10-0-0 |
| சென்னை-சிந்தாதிரிப்பேட்டை கலைப்பிரியன், கந்தசாமி | 10-0-0 |
| நாகை—வெளிப்பாளையம் எல். ஆர். கணபதி | 10-0-0 |
| கோவை கே. நடராஜ் | 9-1-0 |
| அந்தமான்-போர்ட் பிளேர் எம். இராணி | 5-9-0 |
| திருச்செங்கோடு டி. ஜி. கணபதி | 5-0-0 |
| குமாரபாளையம் பி. கோவிந்தசாமி | 3-0-0 |
| ஆத்தூர்-சேலம் லோட்டஸ் டீ ஸ்டால் | 2-0-0 |
| துறையூர் பி. கிருஷ்ணன் | 2-0-0 |
| கீழ்வைத்தினுங்குப்பம் தி. மு. க. | 2-0-0 |
| சென்னை-2 சி. கோவிந்தன் | 2-0-0 |
| வேலூர்—சேலம் வி. எ. இராமநாதன் | 2-0-0 |
| ஆக மொத்தம் ரூ. | 2,334-5-9 |

## எண்ணெய் விலையில் ஏகபோக உரிமை!

'நியாயமா, நீதியா?' எனக் கேட்கிறார் பாரதப் பிரதமர்

கல்கத்தா, நவ. 11—

"இந்தியாவிலுள்ள நாம் இந்தியாவில் உற்பத்தியாகும் எண்ணெய்க்கு இங்கிலாந்தைவிட அதிக விலை கொடுக்கிறோம். பர்மா எண்ணெய் அதிக விலையில் விற்கப்படுகிறது; காரணம், எண்ணெய் விலை மெக்சிகோவில் நிர்ணயிக்கப்படுகிறது; அந்த நாட்டு எண்ணெயின் விலையைக் கொண்டு ஏதோ கணக்குப் போட்டு, இந்தியாவில் உற்பத்தியாகும் எண்ணெய்க்கு விலையை நிர்ணயிக்கிறார்கள்; இது நியாயமா? இது விந்தையாக உள்ளதல்லவா?' என்று பண்டித நேரு அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில் குறிப்பிட்டுவிட்டு எண்ணெய் எந்த நாட்டுக்கும் ஏகபோக உரிமையாக இருக்கக்கூடாதென்றும், விலையில் பிராசுத்தன்மை கூடாதென்றும் எடுத்துரைத்தார்.

## காங்கிரசுக்குள் 'கோஷ்டி'களா?

பண்டித நேருவின் பாய்ச்சல்

கல்கத்தா, நவ. 11—

"ஏதேதோ நோக்கங்களுடன் காங்கிரசுக்குள் 'கோஷ்டி'கள் அமைப்பது ஆட்சேபிக்கத்தக்கது; கொள்கை காரணமாகக் 'கோஷ்டி'கள் ஏற்படுத்துவதில் அர்த்தமிருக்கிறது; ஆனுல் சொந்த நலனுக்காகவோ, பதவிகளைப் பிடிப்பதற்காகவோ கோஷ்டிகள் அமைப்பது மட்டரகமாகும்" என்று பண்டித நேரு அ.இ.கா.க. கூட்டத்தில் கூறியுள்ளார்.

## 'ரஷ்ய ஆக்கிரமிப்பு'

கம்யூனிஸ்டு டாங்கே கருத்து

பம்பாய், நவ. 9—

அகில இந்திய தொழிற் சங்கக் காங்கிரசின் பொதுச்செயலாளரும், இந்தியக் கம்யூனிஸ்டுத் தலைவருமான எஸ். ஏ. டாங்கே 'ரஷ்யப் படைகள் ஹங்கேரியைவிட்டு வெளியேறுவதை எல்லா மக்களும் வரவேற்பர் என்பதில் சந்தேகமில்லை' என்று குறிப்பிட்டுள்ளார்.

மேலும் அவர், 'ஹங்கேரி நிலைமையை சூழ்நிலையாகக் கொண்டு சோவியத் சர்க்கார் ஆக்கிரமிப்பில் ஈடுபடுவது ஊர்ஜிதமானுல் தொழிற்சங்கங்கள், ரஷ்ய ஆக்கிரமிப்பை கண்டித்தே தீரும்' என்றும் கூறியுள்ளார்.

## அற்றுப்போன உறவு!

புதுப்பிக்க நேருவின் ஆசை!

ஊழியர்களுக்கு யோசனை

கல்கத்தா, நவ. 12—

காங்கிரஸ், மக்களிடை இழந்துவிட்ட செல்வாக்கைத் திரும்பப் பெறுவதற்காக, தேர்தல் நெருங்குவதை ஒட்டி, பண்டித நேரு யோசனை ஒன்று கூறியிருக்கிறாராம்.

மக்களுக்கும் காங்கிரசுக்குமுள்ள தொடர்பு அற்றுப் போய்விட்டது என்ற உண்மையை ஒப்புகிற அவர், அந்தத் தொடர்பு மீண்டும் ஏற்பட வேண்டுமென்று விரும்புகிறாராம்!

அதற்காக அவர் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் ஒரு யோசனையையும் வெளியிட்டாராம்.

நகரில் வாழும் மக்களில் சுமார் 100 குடும்பங்களின் நலனை ஒரு காங்கிரஸ் ஊழியர் கவனித்துக் கொள்ள வேண்டுமாம்.

மக்களது தினசரி வாழ்வின் தேவைகளை அந்த ஊழியர் கவனிக்க வேண்டும் என்றும், அவர்கள் கஷ்டப்படும்போது, அவர்களுக்குத் தீவிரமாக உதவக்கூடியவர்களாக ஊழியர்கள் இருக்க வேண்டும் என்றும் நேரு கூறினுராம்.

நகரங்களைப் போலவே கிராமங்களிலும் ஊழியர்கள் இப்படி வேலை செய்தால், மக்களுக்கும் காங்கிரசுக்குமுள்ள தொடர்பு ஸ்திரமானதாக ஆகமுடியும் என்றும் நேரு கூறினாராம்.

அற்றுப்போன உறவை நிலைநாட்ட நேரு பண்டிதருக்குத்தான் எத்தனை ஆசை?

## மக்களின் சீற்றம் கண்டு பண்டிதரின் கொதிப்பு?

கட்டுப்பாட்டை உணர்த்த வெடிகுண்டு வீசவேண்டுமாம்!

கல்கத்தா, நவ. 11—

நாசம் விளைவிக்கும் வெடிகுண்டுகளை தனக்கு உதவிக்கு அழைத்துள்ளார் பண்டித நேரு!

அஹிம்சையைக் காப்பவர்—பஞ்சசீலத்தில் நம்பிக்கை கொண்டவர் என்று பறைசாற்றப்பட்ட பண்டித நேரு, 'கல்கத்தா, பம்பாய் போன்ற நகரங்கள் குண்டு வீச்சின் [illegible] களை கொஞ்சம் அனுப[illegible] டும்; கட்டுப்பாட்டை [illegible] மக்களுக்கு உணர்த்துவதற்கு [illegible] குண்டு வீச்சை நான் [illegible] வேன்' என்று கூறியுள்ளார்.

# நெடுஞ்செழியன் அன்பழைப்பு

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

கிறார்கள். அவர்களெல்லாம் தமிழ் மொழியில் ஆர்வம் கொண்டிருப்பார்களானால் அழகான தமிழ்ச் சொற்களை எஞ்சினீயரிங் துறையிலே கண்டுபிடிக்க முடியும். அப்படியேதான் மருத்துவத் துறையில் ஈடுபடும் மாணவர்கள் அத்துறையிலும் நல்ல தமிழ்ச் சொற்களைக் கண்டுபிடிக்க முடியும்.

"தமிழ் மொழி ஆட்சிமொழியாகவேண்டும் என்று கூறினதும், ஏதோ நாளை காலையிலேயே தமிழ் ஆட்சி மொழியாகிவிடப்போகிறது என்று நினைத்துக்கொண்டு, 'அது எப்படி ஆகிவிடமுடியும்?' என்று கூறுகின்றனர் சிலர். சுமார் 10, 15 ஆண்டுகட்கு முன்பிருந்த நிலையைவிட இன்றைக்குக் காணப்படும் நிலையில் மாற்றம் கண்டிருக்கிறதே, எப்படி?ஏற்பட்டது?

"அன்றையத் தமிழ் நடைமுறையைவிட இன்றையத் தமிழ் நடை எவ்வளவோ வளர்ந்துவிட்டிருக்கிறது. நல்ல தமிழ் கொஞ்சுகிறது, இப்பொழுதெல்லாம்! எப்படி இந்த மாற்றம் ஏற்பட்டது? இம்மாதிரியான மாற்றங்களெல்லாம் முடியுமா என்று யாராவது நினைத்ததுண்டா? நாம் சொற்களைக் கையாளத் துவக்கிவிட்டால் போதும்—இன்றில்லாவிட்டால் என்றாவது ஒருநாள் தமிழ் ஆட்சி மொழியாகியேதான் தீரும்.

## 'தமிழ் ஆட்சி மொழியாக!'

"நமது தமிழ் மொழியில் புதிய புதிய சொற்களை யெல்லாம் உருவாக்கமுடியும். 'ரேடியோ' என்ற சொல் எப்படி 'வானொலி' ஆனது? சங்க கால இலக்கியத்தில் ரேடியோ என்றால் என்ன என்று தெரிந்துகொள்ள முடியாதுதான். சங்க காலத்தில் ரேடியோ இல்லாத ஒன்று! ஆனால் சங்க காலத்திற்குப்பின் தோன்றின ரேடியோவிற்கு எப்படி வானொலி என்ற சொல் வந்தது? இதுபோன்றே பல அயல் சொற்களுக்குப் புதிய தமிழ்ச் சொற்கள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. எனவே, தமிழ் மொழியில் புதிய புதிய சொற்களை யெல்லாம் உருவாக்கமுடியும். ஆனால், தமிழ் மொழியுடன் பிற மொழிகளைத் தாராளமாகக் கலந்து உபயோகிக்கலாம் என்று சிலர் சொல்கிறார்கள். தனியாகப் புதுச் சொற்களை உருவாக்கும் ஆற்றல பெற்றத் தமிழ் மொழியுடன் தாராளமாக மற்ற மொழிகளைச் சேர்த்தால் இந்த மொழிதான் வீழ்ச்சியுறும். இன்றைக்குத் 'திருமறைக் காடு' என்றால் யாருக்காவது தெரிகிறதா? 'வேதாரண்யம்' என்று சொன்னால்தான் தெரிகிறது. திருமறைக்காடு என்ற அழகான தமிழ்ப் பெயர் வீழ்ந்தது—நல்ல பெயரை இழந்தது—வேறு ஒரு மொழிப் பெயர் குடிபுகுந்தது—தாராளமாகச் சேர்த்துக்கொண்டது. இப்படியே பல சொற்களும் இருக்கின்றன. அவசியத்தை ஒட்டி வேண்டுமானால் நமது மொழிக்குப் பிற மொழிச் சொற்களைச் சேர்க்கலாம். அப்படியின்றித் தாராளமாகப் பிற மொழிச் சொற்களை நமது மொழியுடன் சேர்த்தால் உலகில் மற்றச் செத்த மொழிகளைப்போல ஒன்றாகிவிடும்.

"அத்தகு நிலைமைகளிலிருந்து தமிழைக் காப்பாற்றி வளர்க்க மாணவர்களிடம் இருக்கும் பங்கு மிக மிகப் பெரியது. இதனை மாணவர்கள் நன்றாகச் சிந்திக்கவேண்டும். அந்த ஆற்றல் பெற்றோர் அந்தந்தத் துறையில் தங்கள் பணியைச் செவ்வனே செய்து முடிக்கவேண்டும்.

"ஆற அமர ஓய்வாக உட்கார்ந்து ஒரு பொருளை மனதில் பதிய வைக்க—ஆழ்ந்த சிந்தனைகளைப் பதியவைக்கத் தாய் மொழி ஒன்றினால்தான் முடியுமே தவிர, மற்றெந்த மொழியாலும் முடியாது. கருத்தினை வெளியே எடுத்துச் சொல்வதற்கு வேண்டுமானால் மற்ற மொழிகளில் முடியுமே தவிர ஒரு விஷயத்தை நாம் கேட்கும் போது, அதை நம்மை அறியாமலேயே உள்ளத்தில் பதியவைப்பது தாய் மொழியினால் மட்டுந்தான் முடியும். இதை மாணவர்கள் சிந்தித்துப் பார்த்து, அவர்களிடமிருக்கிற பொறுப்புகளை யெல்லாம் உணரவேண்டும்.

"புதிய தமிழகம் உருவாகியிருக்கிறது—தமிழ் மொழியும் ஆட்சி மொழியாகக்கூடிய நிலைமைகள் இருந்து வருகின்றன. இந்த நேரத்தில் மாணவர்கள் ஆற்றல் பெற்றவர்களாக மாறவேண்டும். நமக்கு இருக்கிற நேரம் மிகக் குறைவு. நாட்டுக்கும், நமக்கும், மக்களுக்கும் செய்யவேண்டியவைகளோ ஏராளம். சென்னை மாநிலத்தில் படிக்கத் தெரியாதவர்கள் 100-க்கு 76 பேர். சொந்தப் பெயரையே எழுதிக் காட்டத் தெரியாதவர்கள்—கைநாட்டுப் பேர்வழிகள்—வண்டி மையைக் சுட்டுவிரலால் பதிய வைப்பவர்கள் இத்தனை பேர் இருக்கிறார்கள். அந்த அளவிற்கு நமது தாய்மொழியின் நிலை இருக்கிறது. எனவே இந்த நிலையில் நமக்கு என்ன தேவை என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும். நாட்டைப் புரிந்துகொள்ள, அறிவு பெற, வாழத் தெரிந்துகொள்ள, பள்ளிகளில் படிக்க, நாட்டையும் நம்மையும், நமது ஊரையும் தெரிந்து கொள்ள நமது தாய்மொழி மிக மிகத் தேவை.

## 'நமது ஆற்றலை, அன்னிய மொழிக்குச் செலவிடோம்'

"தமிழ் மொழி அல்லாத பிற மொழி வழங்கும் பகுதியுடன் தொடர்புகொள்ள — விஞ்ஞானம் தெரிய - அகில உலகிலும் வாணிபம் செய்ய - தொடர்பு கொள்ள நமது தாய்மொழியால் முடியாது. நமது தமிழ் மொழியால் எதைச் செய்ய முடியாதோ அதைச் செய்யக்கூடிய ஒரு மொழி தேவை. அது எஸ்கிமோக்கள் மொழியானாலும், நீக்ரோ மொழியானாலும், சீன மொழியானாலும் சரி - நாம் ஏற்றுக்கொள்ளத் தயார். எனவே, அத்தகுப் பயனுள்ள ஒரே மொழி ஆங்கிலமாதலால் நமக்குத் தமிழும் ஆங்கிலமும் தெரிந்திருந்தால் போதும்.

'வடநாட்டினருக்கு மட்டும் என்ன? இந்தி மொழி மட்டும் அவர்களுக்குத் தெரிந்திருந்தால் போதுமா? அவர்களுக்கும் வெளிநாட்டுத் தொடர்புகொள்ள வேறு ஒருமொழி-ஆங்கிலம் தேவைதான்.

"நமக்கு எதற்கு இந்தி? இந்தி மொழி விஞ்ஞானம் படிப்பதற்கு உதவுமா? தமிழ்மொழியினாலாவது ஓரளவுக்கு முடியும்; அதுகூட முடியாதே இந்த இந்தி மொழியினால்!

"எனவே, நமது நேரம், நினைப்பு, ஆற்றல் அனைத்தையும் ஏதாவது ஒரு அயல் மொழிக்குப் பயன்படுத்த வேண்டுமானால் அது ஆங்கிலத்திற்கே தவிர வேறெந்த மொழிக்குமல்ல. இதற்காக நாம் துணிந்து போராடினால்தான் முடியும்; 'நாம் செய்து முடிப்போம்; செய்ய முடியும்' என்ற எண்ணத்துடன் இந்த ஆற்றல் படையினர்—அறிவுப் படையினராகிய மாணவர் அந்த எண்ணம் பெற்றால் அந்தப் படையினரை எதிர்த்து நிற்கும் ஆற்றல், துணிவு வேறு யாருக்கும் கிடையாது.

"அந்த முறையில் இந்தத் தமிழ் மன்றம் ஊக்கத்துடனும் எழுச்சியுடனும் பணியாற்ற வேண்டுமென்று விரும்புகிறேன். 'எங்கள் வாழ்வும் வளமும் மங்காத தமிழென்று சங்கே முழங்கு' என்று பாரதிதாசன் கூறினார். அந்தச் சங்கை முழங்குபவர்கள் மாணவர்களாக இருக்க வேண்டும். இப்போது இருக்கிறவர்கள் எதற்கெடுத்தாலும் அஞ்சி அஞ்சி செத்துச் செத்துப் பிழைக்கிறார்கள். அந்த நிலை மாற மாணவர்கள் உள்ள உரத்துடன் பணியாற்ற வேண்டும். அந்த உள்ள உரம் நேர்மை வழியில் நீதி வழியில் அமைய வேண்டும். அத்தகு உள்ள உரத்தை இந்த மன்றம் தயார் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்."

## சென்னையின் புதிய கவர்னர்

சென்னை, நவ. 12—

சென்னை மாநிலத்தின் புதிய கவர்னர் பற்றி இன்னும் 4 நாட்களில் அதிகாரபூர்வமான அறிக்கை வெளிவரும் என்றும், அந்தப் பெயர் அறிவிக்கப்பட்டதும் எல்லோரும் ஆச்சரியப்படுவார்கள் என்றும் சென்னை நிதி அமைச்சர் கூறியுள்ளார்.

திருவாங்கூர்-கொச்சியின் முன்னாள் முதலமைச்சர் ஏ. ஜே. ஜான், சென்னை கவர்னராக நியமிக்கப் பட்டுள்ளதாகத் தெரிகிறது என்று 'தினமணி'யின் விசேட நிருபர் அறிவித்துள்ளார்.

# நவம்பர் 18:

# காமன்வெல்த்—எதிர்ப்பு தினம்

## சர்வ கட்சித் தலைவர்களின் வேண்டுகோள்

மனித உரிமைக்கும், உலக நாடுகளின் அமைதியான வாழ்வுக்கும் எதிராக எகிப்து மீது பாய்ந்து அட்டூழியங்களைப் புரிந்த பிரிட்டனின் போக்கினைக் கண்டிக்கும் அறிகுறியாகப் பிரிட்டிஷ் காமன்வெல்த்திலிருந்து இந்தியா வெளியேற வேண்டுமென்று நேரு சர்க்காரை வற்புறுத்தவும், அதற்கான செயல் முறைகளில் ஈடுபடுமாறு தூண்டவும் தமிழ் நாடெங்கும் நவம்பர் 18-ம் நாளன்று சர்வகட்சிகளும் ஒன்று சேர்ந்து பொதுக் கூட்டங்கள், ஊர்வலங்கள் ஆகியவைகளை அமைதியாக நடத்தி, நிறைவேற்றப்படும் தீர்மானங்களை இந்திய அரசியலாருக்கு அனுப்பி வைக்குமாறு தமிழ்ப் பெருமக்களைக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

எச். டி. ராஜா எம்.பி., தலைவர் காமன்வெல்த்-எதிர்ப்பு லீக்
என். வி. நடராசன், துணைப் பொதுச் செயலாளர் தி. மு. கழகம்
ப. ஜீவானந்தம் எம்.எல்.ஏ., கம்யூனிஸ்டுக் கட்சி
ஏ. சுப்பிரமணியம், காரியதரிசி, தமிழ் நாடு பிரஜா-சோஷலிஸ்டுக் கட்சி
கா. மு. ஷெரீப், தமிழ் அரசுக் கழகம்
எஸ். கிருஷ்ணமூர்த்தி, உப - தலைவர், தமிழ் நாடு தொழிற் சங்கக் காங்கிரஸ்
பி. எஸ். சின்னதுரை, தலைவர் பிரஜா சோஷலிஸ்டுக் கட்சி.
சி. பா. ஆதித்தன்.

## சென்னையில் தமிழக அமைப்பு நாள் விழா

14—11—56 மாலை 6-மணியளவில், சென்னை 27-வது வட்டம், பிள்ளையார் கோவில் தெருவில் (ஒற்றைவாடை தியேட்டர் அருகில்), தமிழக அமைப்பு நாள் விழாவும், 27-வது வட்ட தி. மு. கழகத் துவக்கவிழாவும் தோழர் ஏ. த. மாணிக்கம் தலைமையில் நடைபெறும்.

பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன், துணைப் பொதுச் செயலாளர் என்.வி. நடராசன், தோழர்கள் ஆ. இராசன், வே. அன்புமணி ஆகியோர் சொற்பொழிவாற்றுவர்.

## தெற்கு மண்டல சபை

சென்னைக்கு 'மூவர்' இடம் பெறுவராம்

சென்னை, நவ. 12—

சென்னை, கேரளம், ஆந்திரப் பிரதேசம் ஆகிய மூன்று மாநிலங்களுக்கான தெற்கு மண்டலசபையில் அங்கம் வகிப்பதற்கான சென்னைப் பிரதிநிதிகள் பெயர்களை அறிவிக்குமாறு கேட்கப்பட்டிருக்கிறதாம்.

சென்னையின் பிரதிநிதிகளாக முதன்மந்திரி காமராசரும், மந்திரிகள் சுப்பிரமணியம், பக்தவத்சலம் ஆகியோரும் இருப்பராம்.

இதுபோல ஒவ்வொரு மாநிலத்திற்கும் மூன்று பிரதிநிதிகள் இருப்பர் என்றும், அந்தந்த மாநில முதன் மந்திரி ஒரு பிரதிநிதியாக இருப்பார் என்றும் தெரியவருகிறது.

கேரள மாநிலத்தில் மந்திரிசபை இல்லாததால் அந்த மாநிலத்திற்கான பிரதிநிதிகளைக் குடியரசுத் தலைவர் நியமிப்பார் என்றும் தெரியவருகிறது.

## சென்னை—ஆந்திர எல்லைத் தகராறு

தீர்த்துவைக்க மத்திய மந்திரி

சென்னை, நவ. 12—

சென்னை—ஆந்திரா மாநிலங்களுக்கிடையேயுள்ள எல்லைத் தகராறினைத் தீர்ப்பதற்காக மத்திய மந்திரி ஒருவர் சீக்கிரமே வருவார் என்றும், இந்த ஏற்பாட்டினை இரு மாநில முதல்வர்களும், மத்திய உள்நாட்டு மந்திரி பண்டித பந்த் முன்னிலையில் ஏற்றுக்கொண்டு விட்டனர் என்றும் மந்திரி சுப்பிரமணியம் கூறியிருக்கிறார்.

## காங்கிரசை முறியடிக்க கூட்டுச் சக்தி?

ஜோத்பூர், நவ. 10—

"காங்கிரஸ் வெற்றிக்குப் பக்கபலமாக உள்ளது, எதிர்க் கட்சிகளின் ஒற்றுமை குறைவேயாகும்" என்று இந்து மகா சபைத் தலைவர் சாட்டர்ஜி, அக்கட்சி மாநாட்டின் தலைமையுரையில் குறிப்பிட்டுள்ளார்.

"விவேகத்துடன் எதிர்க் கட்சிகள் கூட்டாகச் சேர்ந்து, ஓட்டுகள் பிளவு படாமல் பார்த்துக்கொண்டால் நிச்சயம் பொதுத் தேர்தலில் காங்கிரசை முறியடிக்க முடியும்" என்றும் அவர் கூறியுள்ளார். மகாசபை, மற்ற எதிர்க்கட்சிகளுடன் கூட்டு சேரத் தயாராக உள்ளது என்றும் அவர் கூறியுள்ளார்.

## இந்த 'எச்சரிக்கை'யில் என்ன 'அதிசயம்?'

கல்கத்தா, நவ. 11—

"எகிப்து யுத்தத்தைக் காரணமாகக்கொண்டு வியாபாரிகள் விலைவாசிகளை உயர்த்தினால் அரசாங்கம் கடும் நடவடிக்கை எடுக்கும்" என்று பண்டித நேரு கூறியுள்ளார்.

## எகிப்துக்கு ரஷ்யத் தொண்டர்கள் செல்வர்?

மாஸ்கோ, நவ. 10—

பிரிட்டிஷ் - பிரெஞ்சு-இஸ்ரேல் படைகள் எகிப்திலிருந்து வாபஸ் ஆகாவிட்டால்—அல்லது வாபசாவதைத் தாமதப்படுத்தினால் ரஷ்யத் 'தொண்டர்கள்' எகிப்து இராணுவத்தில் சேருவதை ரஷ்ய அதிகாரிகள் தடுக்கமாட்டார்கள் என்று செய்தி தரப்பட்டுள்ளது.

அமெரிக்கா எதிர்ப்பு

எக்காரணம் கொண்டும் எகிப்திய இராணுவத்திற்கு 'ரஷ்யத் தொண்டர்'களை அனுப்புவதை அமெரிக்கா எதிர்க்கும் என்று அமெரிக்க அதிகாரி ஒருவர் கூறியுள்ளார்.

## யூகோஸ்லாவியாவிடம் நாகி சரணடைந்தார்?

புடாபெஸ்ட், நவ. 12—

ஹங்கேரியின் முன்னாள் பிரதமர் இம்ரே நாகி இங்குள்ள யூகோஸ்லாவியத் தூதர் காரியாலயத்தில் சரணடைந்துள்ளதாக மேற்கு நாடுகளின் நிருபர்கள் அறிவித்துள்ளனராம்.

## பரிகாரம் தேடியதாகுமா?

பெல்லியகாடா, நவ. 10—

கிழக்கு பாகிஸ்தானிலிருந்து வெளியேறி வந்த 13 வயது நிரம்பிய அனில்தாஸ் எனும் சிறுவன் கடந்த இரண்டு நாட்களாக உணவின்றித் தவித்ததாகவும், தன்னுடைய கஷ்டத்தைப் பண்டிதநேருவிடம் எடுத்துச் சொல்ல, அவர் சென்ற காரை நோக்கி ஓடியதாகவும், அந்தச் சிறுவனை இராஜபவனத்திற்கு அதிகாரிகள் அழைத்துச் சென்று உணவளித்ததாகவும் செய்திகள் கூறுகின்றன.

## புதிய சோஷலிசமுறையை இந்தியா பின்பற்றுமாம்!

கல்கத்தா, நவ. 10—

'பொதுவுடைமை நாடுகள் கையாளும் சோஷலிசத்திற்கும், முதலாளி நாடுகள் கையாளும் சோஷலிசத்திற்குமிடையே ஒரு புதிய முறை சோஷலிசத்தை இந்தியா பின்பற்றும்" என்று பண்டித நேரு, அ. இ. கா. க. கூட்டத்தில் குறிப்பிட்டார்.

## இறுதிப் பட்டியல்!

கல்கத்தா, நவ. 11—

காங்கிரஸ் அபேட்சகர்களின் இறுதிப் பட்டியல் ஜன. 15-ந் தேதிக்குப் பின், மத்திய தேர்தல் குழு அறிவிக்கும் என்று கூறப்பட்டுள்ளது.

## ஏஜெண்டுத் தோழர்களுக்கு:

'நம் நாடு' இதழ் அதிகப் பிரதிகள் கேட்டுஎழுதும் ஏஜெண்டுத் தோழர்கள் இதழ் ஒன்றுக்கு ரூ. 2. வீதம் உடன் முன்பணம் அனுப்பினால் தான், கிடைத்தத் தேதியிலிருந்து தேவையான அதிகப் பிரதிகளை அனுப்ப இயலும். முன்பணம் அனுப்பாதத் தோழர்களுக்கு அதிகப்படியான இதழ்களை அனுப்ப இயலாதென்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

—பொறுப்பாளர்

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப் பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

